உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு"

மலர் ரு | ஆங்கீரச ஆண்டு ஆனித் திங்கள் 1932 ஹு ஜூன்மீ | இதழ் சு

## தினசரி வாழ்வில் பௌதிக அறிவு

[பத்திராசிரியர்]

[குறிப்பு :—இது மன்னார்குடியில் 1-5-32-ல் கௌமாா குருகுலத்தில் யாம் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம். தத்துவ ஆராய்ச்சிக்குத் துணை செய்யுமெனக் கருதி இது வெளியிடப்படுகிறது.]

**தினசரி வாழ்க்கை :**—தினந்தோறும் நமது வாழ்க்கையில் கண், காது, மூக்கு, மெய், நாக்கு என்ற ஐந்து வழிகளால் நாம் அறிகின்ற பொருள்களின் தன்மைகளையும் அவைகளால் நமக்குஉண்டாகும் நன்மைகளையும் நாம் செவ்வையாக உணர்வதில்லை. அவைகள் மிகவும் சாமானியப்பொருள்களாக இருப்பதால் அவைகளைப்பற்றி நாம் சிந்திப்பதேகிடையாது. ஆனால் அவைகளைப்பற்றிய சில உண்மைகளை நாம்தெரிந்துகொண்டால் நம்முடைய இன்பம் நாளுக்கு நாள் விருத்தியடையும்.

**பஞ்ச பூதங்கள் :**—பௌதிக அறிவுஎன்றால் பஞ்ச பூதங்களைப்பற்றிய அறிவு. பஞ்ச பூதங்கள் பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் என்று வடமொழியிலும், நிலம், நீர், தீ, வளி, வான் என்று சுத்த தமிழிலும் சொல்லப்படும். இவற்றில் ஒவ்வொன்றைப்பற்றியும் நமது தினசரி வாழ்வில் தெரிந்துகொள்ள வேண்டிய சில விஷயங்களையே நான் எடுத்துச் சொல்லப்போகிறேன்.

**நிலத்தின் தன்மை :**—இதன் முக்கியமான தன்மைகள் கடினம், கிடத்தல், பொறுத்தல் என்பன. இந்த தன்மைகளையுடைய பொருள் எதுவுமே இவ்வுலகத்தில் இல்லாவிட்டால் நாம் உயிர் வாழவே முடியாது. கடினமான கல, மண், மரத்துண்டுகள், தூண், ஓடுகள் முதலியன இல்லாவிட்டால்

நாம் வீடு கட்டிக்கொண்டு இருக்கமுடியுமா? கடினமான பாத்திரம் சமையலுக்கும், நாணயம் பண்டங்கள் வாங்குவதற்கும், பேனா காகிதம் எழுதவும் உபயோகப்படுகின்றன. இவ்வாறே எல்லாப் பிருதிவிப் பொருள்களையும் பற்றி யோசிக்கலாம். இஃதேபோல் கிடத்தல் என்ற தன்மையையும் கவனிக்கலாம். இரும்பு பெட்டி, திறவுகோல், நகைகள், சாமான்கள் முதலியனவெல்லாம் வைத்த இடத்தில் கிடவாமல் நீர், தீ, காற்று முதலியவற்றைப்போல் ஓடிவிட்டால் நாம் எவ்வாறு கவலையில்லாமல் வாழமுடியும்? இதேபோல ஒன்றையொன்று தாங்கி பொறுக்காவிட்டாலும் கஷ்டம் ஏற்படும். ஆங்கிலத்தில் இம்மூன்று முக்கிய குணங்களை rigidity (ரிஜிடிடி) inertia (இனெர்ஷியா) friction (ப்ரிக்ஷன்) என்று சொல்வார்கள். Friction (ப்ரிக்ஷன்) அல்லது சுர சுரப்பு இல்லாவிட்டால் எந்தப் பண்டமும் வைத்த இடத்தில் நில்லாமல் வழவழவென்று ஓடிக்கொண்டே யிருக்கும். ஆகையால்தான் இவ்வெல்லாக் குணங்களுக்கும் அடிப்படையாக இருப்பது நிலைத்திருத்தல் என்பதைக் குறிக்கவே பிருதிவிக்கு நில்+அம்=நிலம் என்று பெரியோர்கள் தமிழில் பெயரிட்டார்கள்.

நமது பூமி :—இம்மட்டில் நிலத்தைப்பற்றிய பொதுப் பேச்சை நிறுத்திச் சிறப்பாக நாம் வசிக்கின்ற இம்மாநிலத்தைப்பற்றிச் சிறிது சிந்திப்போம். நாம் வசிக்கின்ற பூமி உருண்டை வடிவாக 8000 மைல் குறுக்களவும் 25000 மைல் சுற்றளவும் உள்ளது. இது தன்னைத் தானே 24 மணிக்குள் ஒரு முறை சுற்றி வருகிறது. இதனால்தான் பகல் 12 மணியும் இரவு 12 மணியும் ஏற்படுகின்றன. இதைத் தவிர சூரியனைச்சுற்றி 365¼ நாளுக்கு ஒருமுறை வருகிறது. இதுதான் ஒரு வருஷம் என்பது.

பூமியின் கட்டிப் பகுதி :—நிலத்தைத் தோண்டிக் கொண்டே சென்றால் 50 அடி ஆழத்துக்கு 1 டிக்ரிவீதம் உஷ்ணம் அதிகரிக்கின்றது. இவ்வாறு கணக்கிட்டால் இரும்பு, செம்பு, பொன், வெள்ளி முதலிய எதுவும் 20 மைல் ஆழத்துக்குமேல் கட்டியாக இருக்கமுடியாது. இதைப் போன்ற பலவகைக் கணக்கு முறைகளினால் பூமியின் கட்டிப்பகுதி solid crust (சாலிட் கிரஸ்ட்) 17½ மைல் பருமனுடைய தென்றும் அதற்குக்கீழ் எல்லாம் உருகிய இளம்பாகாகவும் வெப்பமான வாயுவாகவும் இருக்கும் என்றும் கண்டுபிடித்துள்ளார்கள். ஆகையால் 8000 மைல் பருமனுள்ள இப்பூமியில் (17½ + 17½)=35 மைல் கனம் தான் கட்டிப்பகுதியாயிருக்கிறது. அதாவது தேங்காயில் ஓடுபோல் கட்டிப்பகுதி யிருக்கிறது. இவ்வளவு இலேசான கட்டிப்பகுதிதான் ஜீவராசிகள் உயிர் வாழ்வதற்குரிய கடினம், கிடத்தல், பொறுத்தல் முதலிய பிருதிவித் தன்மைகட்கு மூலாதாரமா யிருக்கிறது.

புலத்தின் கூறு :—இனி இந்நிலத்தில் எல்லாவற்றிற்கும் மேலே வெங்காயப் புரைபோல சில அடிகள் ஆழமிருக்கும் புலம் (சாயில் Soil) என்பதைக் கவனிப்போம். செழிப்பான நிலத்தின் (அதாவது புலத்தின்) மண்ணில் கரற்பங்கு தண்ணீரும் காற்பங்கு காற்றும், மீதமுள்ள அரைப்பங்

இல் நான்குபாகம் பலவகையான உலோக உப்புக்களும் ஒரு பாகம் உயிர்ச் சத்தும் (Organic matter) இருப்பதாக உழவு நூலார் கணக்கிடுகின்றனர்.

அதாவது நூற்றில் {
நீர் 25% பங்கு
காற்று 25 ,,
உப்புகள் 40 ,,
உயிர்ச்சத்து 10 ,,
}

உப்புகள் என்பதில் பெரும்பான்மை சிலிகா (Silica) என்ற மணல் சத்தும் சிறுபான்மை இரும்பு, அலுமினியம், பொடாசியம், பாஸ்பரஸ், கந்தகம், சுண்ணும்பு, கரி முதலிய சத்துக்களுமாக இருக்கும். மண்ணில் மணற்பாங்கு, களிப்பு என்று இரண்டு விதமுண்டு. இவற்றுள் மணற்பாங் இல் சிலிகா என்பது மிகுதியாகவும் (பத்தில் ஒன்பது பங்கு) ஏனைய உப்புச்சத்துகள் குறைவாகவுமிருக்கும். களிப்பு மண்ணில் சிலிகா (பாதி பங்கு தான்) குறைவாகவும், அலுமினியம் இரும்பு உப்புகள் (மூன்றில் ஒரு பங்கு) களிப்புக்குக் காரணமாகவும், சுண்ணும்புச் சத்தும் பாஸ்பரஸ் (Phosphorus) சத்தும் மணற்பாங்கைவிட நான்கு மடங்கு அதிகமாகவும் இருக்கும். மேலும் மணற்பாங்கைவிடக் களிப்பு மண்ணில் உயிர்ச்சத்து மிகுதியுமுண்டு. மணற்பாங்கு நிலத்துக்கு உயிர்ச் சத்தான எருவிடுதலும் களிப்பு நிலங்களுக்கு சுண்ணும்பு வைத்து சிறிது மணற்பாங்காக்குவதற்காக நன்ருக உழுதலும் செய்யவேண்டும்.

புலத்தில் கிருமிகள் :—புலத்தில் கோடிக்கணக்கான கிருமிகள் இருக்கின்றன. இவைகட்குச் சாயில் பாக்டீரியா (Soil bacteria) என்று பெயர். இவைகளின் முக்கியமான தொழில் நிலத்திலுள்ள உயிர்ச் சத்து உப்புச் சத்து முதலியவைகளைப் பிரித்துச் சுலபமான பண்டங்களாகப் பயிர்வர்க்கங்களின் வேர் மயிர்க்கால்களில் ஊட்டுவதேயாம். இவைகள் நன்ருய் ஜீவிக்கவேண்டுமானல் இவைகளுக்கு நல்ல காற்று தண்ணீர் முதலியன தேவை. மண் களிப்பு மிகுதியாயிருந்தால் அதற்குள் நல்ல காற்று உலவ முடியாது. ஏனெனில் மண் துளிகளிடையிலுள்ள இடைவெளி (Pores) குறைந்து காற்ருேட்டத்தை நெருக்கும். இந்த காரணத்தினலேயே நீரோட்டமும் உஷ்ணத்தின் ஓட்டமும் தடைபடும். ஆகையால்தான் ஒரு பலம் மண் காற்பலம் ஆகும்படி உழுதால் எரு வேண்டியதில்லையென்று திருவள்ளுவர் கூறினர்.

“ தொடிப்புழுதி கஃசாவுணக்கிற் பிடித்தெருவும் வேண்டாது சாலப்படும் ”

என்பது திருக்குறள் (1037-வதுகுறள்.)

தஞ்சை ஜில்லாவில் புலம் :—தஞ்சாவூர் ஜில்லாவில் நிலம் மிகச் செழிப்பாக இருந்தபோதிலும் போதுமான அளவு உயிர்ச்சத்து, உப்புச் சத்து, பாஸ்பரஸ் சத்து இங்கில்லை என்று விவசாய இலாகா தீர்மானித்திருக்கிறது. இதற்குக் கால் நடை எரு, தழை எரு, எலும்புச்சத்து எரு, புண்ணுக்கு முதலிய எருக்கள் தேவை. இங்கே ஒரு ஏக்காரவுக்கு எவ்வளவு விளைகின்றதோ அதைப்போல் ஸ்பெயின் (Spain) தேசத்தில்

வாலென்ஸியா (Valentia) என்ற இடத்தில் 5½ பங்கு அதிகமாக விளைகின்றது. எல்லாத் தேசங்களைவிட இந்தியா தேசத்தில் தான் விளைவுமிகக் குறைவாக இருக்கிறது என்று விவசாய நூல்கள் கூறுகின்றன. ஆகையால் இனியாவது நிலத்தின் கூறுகளை நன்றாய்த் தெரிந்துகொண்டு விழிப்பாக நாம் வேலை செய்யவேண்டும். இம்மட்டில் நிலத்தைப்பற்றிய பேச்சை நிறுத்தி இனி நீரைப்பற்றி யோசிப்போம்.

நீர் அல்லது அப்பு :—இதன் தன்மைகள் நெகிழ்ச்சி, குளிர்ச்சி பதஞ் செய்தல் முதலியன. இவைகள் எல்லாவற்றிலும் முக்கியமானது நெகிழ்ச்சி என்பதே. மேலே யிருந்து கீழே ஓடுவது, மாவாகவுள்ள பொருள்களைக் கரைப்பது முதலிய தொழில்கள் இத்தன்மையின் காரியங்கள். பொதுவாகக் கடினத்தைக் குறைத்து மென்மையை அதிகரிப்பது நீரின் இயல்பு. இத்தன்மைகளால் நமது வாழ்க்கையில் ஏற்படும் சௌகரியங்கள் எண்ணிறந்தன. மேலே யிருப்பது கீழே ஓடுவது என்ற சுபாவம் நீருக்கு இல்லாவிட்டால் மழை பூமியில் பெய்யாது, ஆறுகள் வாய்க்கால்கள் ஓட முடியாது, நாமும் தண்ணீர் குடிக்கவும் முடியாது. கரைக்கின்ற சக்தி நீருக்கில்லாவிட்டால், நிலத்திலுள்ள உப்புச் சத்துக்கள் முதலியன கரையாமல் செடிகொடி பயிர் முதலியவற்றின் வேர்க்கால்களில் பாயாமல் பயிர்களும் தாவரவர்க்கமும் உலகத்தில் இல்லாமலே போகும். நமது சாப்பாடு கரையாமல் ஜீரணமாகாமல் நாமும் உயிர் வாழமுடியாது. இரத்த ஓட்டமும் இராது. எனவே நமது உலகம் தாவரங்களும் மனிதவர்க்கமும் மிருகவர்க்கமும் இல்லாத உலகமாய்விடும். சந்திரலோகத்தில் தண்ணீர் இல்லையென்றும் ஆகையால் தாவரங்களும் வேறு எவ்வகை உயிர் வர்க்கங்களும் ஆங்கில்லையென்றும் வானநூலார் கூறுகின்றனர். இன்னம் இவ்வாறே நுணுகி நுணுகியோசித்துச் செல்லலாம். இம்மட்டில் பொது ஆராய்ச்சியை நிறுத்தித் தண்ணீரைப்பற்றிச் சிறப்பாக யோசிப்போம்.

நீரின் ஆக்கம் :—இரண்டு பாகம் நீர் வாயு ஒரு பாகம் பிராண வாயு என்ற இவற்றின் சேர்க்கையால் தண்ணீர் ஆக்கப்பட்டது. இதில் எரிக்கும் சக்தி பிராணவாயுவுக்கும் குளிர வைக்கும் சக்தி நீர்வாயுவுக்கும் உண்டு. தண்ணீரிலுள்ள பிராணவாயு பல உப்புச்சத்துக்களோடு சேர்ந்து சூட்டை உண்டாக்கவும் நீர்வாயு சில வாயுக்களோடு சேர்ந்து அமோனியா முதலிய செடிகளை உண்டாக்கவும் பயன்படும். தண்ணீரிலுள்ள பிராணவாயுதான் இரும்பு முதலிய கடினமான பண்டங்களோடு சேர்ந்து அவைகளைக் கரையக்கூடிய உப்புக்களாக மாற்றுகின்றது. பிறகு உப்புக்களை செடிபயிர்களின் வேர்க்கால்களில் ஊட்டி வளர்க்கிறது. நாம் இரும்புச் சத்தை நேராக உட்கொள்ளமுடியாது, சைவர்க்கம் இலைக்கறி மூலமாகவே உட்கொள்ளவேண்டும். அவைகளில் இரும்புச் சத்தைப் பதிய வைப்பது தண்ணீரிலுள்ள பிராணவாயுவின் வேலையே. இன்னம் பலவகையாகத் துருவியாராய்ந்தால் நீரின் பெருமையும் அவசியமும் நன்கு விளங்கும். இதற்காகத்தான் நமது தமிழ் நூல்களிலும் புராணங்களிலும் முதன் முதலாக நாட்டுப்படலம் என்று தொடங்கி நீர்வளத்தை அபரிமிதமாக வருணிப்பது வழக்கம். திருக்

குறளிலும் " வான்சிறப்பு " என்று ஒரு தனி அதிகாரத்தில் மழை, நீர் இவைகளின் சிறப்பு கூறப்பட்டுள்ளது. ஔவைப் பிராட்டியாரும் " வரப்புயர நீருயரும், நீருயர நெல்லுயரும், நெல்லுயர குடியுயரும், குடியுயர முடியுயரும் " என்று கூறினர்.

**உடம்பிலும் உணவிலும் நீர்ப்பகுதி:**—இனி நமது உடம்புக்கும் நீருக்குமுள்ள தொடர்பைப்பற்றிச் சிறிது சிந்திப்போம். சாதாரணமான நல்ல பிராயமுள்ள ஒரு மனிதனைப்பற்றிய சில விவரங்கள் கீழ் வருமாறு :—

எடை 154 பவுன்(அல்லது ராத்தல்) - ஒரு மணங்குக்கு 25 பவுன்.

| | | | |
|---|---|---|---|
| இதில் நீர்ப்பகுதி | 88 ,, | } | அதாவது ஏழில் நாலு பங்கு நீர் |
| கடினப் பகுதி | 66 ,, | } | ,, மூன்று ,, கடினம். |

இம்மனிதன் தினசரி உணவில்,

| | | |
|---|---|---|
| கடினப்பகுதி | 8000 | கிரெயின் (5760 கிரெயின் = ஒரு ராத்தல் அல்லது பவுன்.) |
| தண்ணீர்ப்பகுதி | 36500 | ,, |
| பிராணவாயு | 10000 | ,, |
| | 54500 | ,, |

இம்மனிதன் தினசரிக் கழிவில்,

| | | |
|---|---|---|
| தண்ணீர்ப்பகுதி | 40000 | கிரெயின் |
| மற்றப் பகுதிகள் | 14500 | ,, |
| | 54500 | ,, |

இந்தக் கணக்கில் உட்பகுதிகளாக எத்தனையோ புள்ளி விவரங்கள் உள்ளன. அவைகளை விவரிக்க நேரமில்லை. இவ்வாறே தாவரங்களின் உடலிலும் (பிளான்ட் டிஷ்யூ In plant tissue.)

| | | | |
|---|---|---|---|
| தண்ணீர் | 100க்கு | 75 | பங்கு உள்ளது. |
| கரி | ,, | 11 | ,, |
| பிராணவாயு | ,, | 10 | ,, |
| நீர்வாயு | ,, | 2 | ,, |
| சில உப்புக்கள் | ,, | 2 | ,, |

**நீரே குணத்துக்குக் காரணம்** :—மற்றொரு மிக முக்கியமான விஷயமுண்டு. அதாவது ஒவ்வொரு மனிதனுடைய குணாதிசயத்துக்கும் காரணமாகவுள்ளது நீர்ப் பகுதியே. இதைத்தான் பழைய கிரேக்க ஆசிரியர்கள் ஹ்யூமர்ஸ் (Humours) என்று கூறினார்கள். கி. பி. 1900 வரையில் இது ஒரு குருட்டு நம்பிக்கை யெனப்பட்டது. ஆனால் சமீபகாலத்தில் என்டொக்ரைன் கிளாண்டுகள் (Endocrine Glands) என்ற குழாய்களின் வழியாக ஹார்மோன்ஸ் (Harmones) என்ற ஒருவகையான நீர்த்துளிகள் இரத்தத்தில் கலப்பதால்தான் ஒவ்வொரு தேசத்து மக்களுடைய பொது நாகரிகம் உடலமைப்பு முதலியனவும் ஒவ்வொரு மனிதனுடைய குணங்களும் குண வேறுபாடுகளும் உண்டாகின்றன என்று மேல்நாட்டுத் தத்துவஞானிகள் கண்டுபிடித்துள்ளார்கள். இந்த எண்டொக்ரைன் கிளாண்டு

களில் முக்கியமானவை தைராய்ட் (Thyroid இது கழுத்திலிருக்கிறது), பிட்யூடரி (Pituitary இது மண்டையின் அடிப்பாகத்தி லிருக்கிறது), சுப்ராரினல் (Supra Renal இது Kidney என்ற குண்டிக்காயின் மேலிருக்கிறது) எனப்படுகின்றன. இவைகளுள் மிக முக்கியமானது தைராய்ட் என்பது. இதிலிருந்துவரும் சத்துக்கு தைராக்ஸின் என்று பெயர். இதில் ஐயோடைன் (Iodine) ஆர்ஸனிக் (Arsenic) என்ற இரண்டும் உள்ளன. இந்த தைராக்ஸின் சத்து குறைவாயிருந்தால், நெற்றி பெருத்து கண்ணும் மூக்கும் முகமும் சப்பையாகிவிடும். சைன ஜப்பான் தேசத்திலுள்ளவர்களுக்கே தைராக்ஸின் குறைவு. ஆகையால்தான் அவர்கள் எல்லாரும் அப்படியிருக்கிறார்கள். இவ்வாறே சுப்ராரினல் குழாயில் வரும் சத்து குறைந்தால் மயிரில்லாத முகமும் உடம்பும், குறுகிய அளவும் ஏற்படும். இதனாலேயே ஆப்பிரிக்கா கண்டத்துக் காப்பிரிகள் அவ்வாறிருக்கிறார்கள்.

**நீரே கோபம் விளைப்பது:**—சாதாரணமாக ஒவ்வொரு மனிதன் வாழ்க்கையிலும் இந்தக் குழாய்களில் வரும்சத்து பேதப்படுவதால் குணமாறுபாடுகளும் செயல்மாறுபாடுகளும் உண்டாகின்றன. உதாரணமாக சுப்ராரினல் ஜொண்டு வழியாக அட்ரீநலின் (Adrenalin) என்ற சத்து இரத்தத்தில் கலந்தால் கண் சிவத்தல், உடம்பு துடிதுடித்தல், மயிர்கள் நேராக நிற்றல், பல்லெரித்தல் முதலிய கோபக் குறிகளும் செயல்களும் நிகழும். குடலிலிருந்து இரத்தத்தில் சர்க்கரை அதிகமாக நுழையும், உடம்பு கொதிக்கும், மற்ற இடங்களிலுள்ள இரத்தமெல்லாம் நரம்புகளுக்கு ஓடும்.

**நீரும் மக்கட் பிரிவும் :**—தேசத்து மக்களுக்குப் பொதுவாக இந்தச் சத்துக்கள் ஒரு வகையாக இருப்பதுபோலவே குடும்பங்களிலும் இருக்கும். பொதுவாக மக்களை தைராய்ட் மிகுதியுடையோர், பிடேரி மிகுதியுடையோர், அட்ரீகலின் மிகுதியுடையோர் என்று கூறுசெய்யலாம்.

**நீர்மை :**—இத்தகைய அதிசயங்களெல்லாம் நீரினிடத்தில் இருப்பதால்தான் பழைய தமிழ்மக்கள் சிறப்புக் குணங்களின் தொகுப்பு அல்லது சேர்க்கைக்கு நீர்மை என்று பெயரிட்டார்கள் போலும். இம்மட்டில் நீரைப் பற்றிய பேச்சை நிறுத்தி இனித்தீயைப் பற்றி ஆராய்வோம்.

**தீ அல்லது தேஜஸ் :**—பழைய கட்டளை நூல்களில் இதன்குணம் சுட்டு ஒன்றுவித்தல் என்றிருக்கும். தீயின் முக்கிய குணம் வெப்பம். சூரிய வெப்பம் ஒன்று நீங்கலாக நாம் சாதாரணமாகக் காண்கின்ற வெப்பமெல்லாம் பிராணவாயுவின் சேர்க்கையால் (Oxidation) உண்டாவதே. நமது உடம்பிலுள்ள 98·5° F என்ற அளவில் நிற்கும் வெப்பம் நாம் உட்கொள்ளும்பிராணவாயு ஏனைய பொருள்களைச் சுட்டு மாற்றுவதால் உண்டாகும் வெப்பமே. அது அளவுக்கு மீறி வேலைசெய்தால் உடம்பு வெப்பம் அதிகரிக்கும். நாம் கஷ்டமான வேலையொன்றைச் செய்யும்போது உடம்பு சுடுவதற்குக் காரணம் அதுவே. ஜுரம் வந்தால் உடம்பு சுடுவதற்கும் காரணமும் அதுவே. வேலையினால் உடம்பு சுடுவதைநீக்க இளைப்பாறல், குளித்தல் முதலிய சிகிச்சைகள் போதும். ஆனால் ஜுரத்தினால் உடம்பு சுடுவதை நீக்க இந்த சிகிச்சைகள் போதா, ஏனென்றால் உள்ளே சில குற்றங்கள்

மிருந்தால்தான் பிராணவாயு அவைகளைச் சுட்டு வெப்பத்தை யதிகரிக்கும். ஆகையால் இப்பிராண வாயுவுக்கிரையாக கொய்னு, செக்நூரம், நிலவேம்பு முதலிய கசப்புச் சத்துக்களைத் தரவேண்டும். இவைகட்கு (Alkalies) என்று பெயர். இந்த சிகிச்சைக்கு (Alkalising theSystem) என்று பெயர். இவைகள் உள்ளே சென்றால் இவைகளைப் பிரித்து எரித்து வேலை செய்து பிராணவாயு தனது சக்தியை யொழிக்கும்.

**எரியும் சத்துள்ள பொருள்கள் :—** சாதாரணமாகத் தீவைத்தால் எரியக்கூடிய பொருள்கள் எல்லாவற்றிலும் கரி, நீர்வாயு, பிராணவாயு ஆகிய மூன்றும் சேர்ந்திருக்கும். இவைகளுக்கு (Carbo-hydrates) (கார்போ ஹைட் ரேட்ஸ்) என்று பெயர். இவைகளில் தீயிட்டால், இந்த மூன்றும் தனித்தனியே ஆகாயத்திலுள்ள கரி, நீர்வாயு, பிராண வாயுக்களோடு சேர்ந்து அவைகளோடு ஒன்றிவிடும். இதைத்தான் பழைய கட்டளை நூல் சுட்டு ஒன்றுவித்தல் என்கிறது போலும். இம்மட்டில் தீயைப்பற்றி நிறுத்திக்கொண்டு உலகத்திலுள்ள எல்லாத் தீயுக்கும் வெப்பத்துக்கும் காரணமாகவுள்ள சூரிய வெப்பத்தைப்பற்றிச் சிறிது கவனிப்போம்.

**சூரிய வெப்பம் :—** சூரிய வெப்பம் இல்லாவிட்டால் உலகத்தில் உயிர்கள் வாழவேமுடியாது. சூரியவெப்பம் குறைந்துள்ள மழை காலம் பனிக் காலங்களில் நமக்கு எவ்வளவு நோய்கள் வருகின்றன ? சூரியவெப்பமில்லாவிட்டால் கடல்நீர் மேகங்களாகி சுத்தமழை நீராக மாறி ஆறு ஏரி குளங் கட்கு வரமுடியாது. நீரில்லாவிடில் உயிர் வாழ்க்கை இல்லை யென்று முன்னரே படித்தோம். சூரிய வெப்பமும் வெளிச்சமும் இல்லாவிட்டால் செடிகளில் கார்போ ஹைட்ரேட் என்ற வஸ்து உண்டாகாது. காற்றிலுள்ள கரிவாயு (Carbondioxide) பிரிந்து கரிசெடிக்குள் நுழைவது போட்டோ சிந்தசிஸ் (Photosynthesis) என்ற ஒரு தொழிலினால் நடக்கிறது. அது சூரிய வெப்பமும் வெளிச்சமும் இல்லாவிட்டால் நடவாது. பணத்தை இரும்புப் பெட்டியில் சேர்த்து வைப்பதுபோல் தாவர வர்க்கங்கள் Photosynthesis என்ற தொழிலினால் சூரியவெப்பத்தை Carbohydrates என்ற பொக்கிஷமாக மாற்றிச்சேர்த்து வைக்கின்றன, இப்பொக்கிஷத்தையே பறவைகள், நீர்வாழ்வன, விலங்குகள், மக்கள் ஆகிய எல்லா ஜீவராசிகளும் கையாளுகின்றன.

**வெப்பமும் வேலையும்:—** வெப்பத்துக்கும் வேலைக்கும் சம்பந்தமுண்டு. வெப்பம் வேலைசெய்யும். வேலையும் வெப்பத்தைச் செய்யும். நீராவியின் வெப்பம் புகை வண்டித் தொடரையும், எண்ணெய் ஆவியின் வெப்பம் மோட்டார் வண்டியையும் இழுக்கின்றன. இதிலிருந்து வெப்பம் வேலை செய்வதை யறியலாம். தச்சன் மரத்தைக் குடையும்போது துறப்பணம் முனையைத் தொட்டுப் பார்த்தால் அது கொதிக்கும். சக்கிமுக்கிக் கல்லைத் தட்டினாலும் சாணைப்பிடிக்குங் கல்லில் கத்தியைப் பிடித்தாலும் தீப்பொறி கிளம்பும். இவைகளிலிருந்து வேலை வெப்பத்தைத் தருவதை யறியலாம். இம்மட்டில் தீயைப்பற்றிய ஆராய்ச்சியை நிறுத்தி இனி வாயுவைப்பற்றி யோசிப்போம்.

வாயு அல்லது வளி :—இதன் தொழில் சலித்து எவையுந் திரட்டுதல் என்று கட்டளை நூல் கூறும். சர்வ வியாபகத் தன்மை என்று பொதுவாகக் கூறலாம். ஒரு பாத்திரத்தில் மண் அல்லது தண்ணீரை வைத்தால் வைத்த இடத்தில் அது இருக்கும். ஆனால் கொஞ்சம் வாயுவொன்றை விட்டால் அப்பாத்திரம் முழுமையும் அதுவாகவே வியாபிக்கும். தான் இருக்குமிடத்தும் அங்குள்ள வேறு பொருள்களை ஓட்டமுயலும். நமது உடம்பினுள்ளே எல்லா வேலைகளையும் நடத்தும் ஆட்கள் பத்து வாயுக்களே. வாயில் வைக்கும் சோற்றைப் பிடித்து வயிற்றில் தள்ளி, சின்னபின்னமாக்கி, ஜீரணப்படுத்தி, பிரித்து, இரத்தத்தில் சத்தைச் சேர்த்து, சக்கையை மலத்தில் தள்ளி, மலமூத்திரங்களையும் வேர்வை முதலியவற்றையும் வெளியேதள்ளி, இரத்தத்தை உடம்பு முழுமையும் பாய்ச்சி வேறு எண்ணிறந்த வேலைகளையும் செய்வன இந்த பத்து வாயுக்களே. மோட்டாரில் விடும் பெட்ரோல் வாயுவாகிக் காற்றோடு கலந்து வெடிக்கும் கலவையாக (Explosive mixture) மாறிவெடித்து பிஸ்டன் (Piston)என்ற குழாயைத்தள்ளி சக்கரத்தை உருட்டுகிறது. அஃதேபோல் நீராவியும் இரயில் சக்கரத்தை உருட்டுகிறது.

வாயுவின் சக்தி :—உலகத்திலுள்ள முக்கியமான வாயுக்கள் பிராணவாயு, நீர் வாயு, கரி வாயு, உப்பு வாயு என்பனவே. இவைகளில்லாவிடில் உலகமே நடைபெறாது. இவைகளின் வேலைகளை யெல்லாம் முன்னரே பல இடங்களில் கண்டோம். குறுகவும் நீளவும் உள்ள சக்தியே வாயுவின் பெருமையாகும். வாயு புத்திரனை அநுமானும் குறுகவும் விஸ்வரூபம் எடுக்கவும் செய்தகதையின் உட்கருத்தும் இதுவாக இருத்தல்கூடும். பெருக்கத்தில் பெருகவும் சிறுக்கத்தில் சிறுகவும் செய்தல் உண்மை ஆற்றலுக்கு அழகேயாம்.

ஆகாசம் அல்லது வான்:—இதன் தன்மை நிரந்தரமா யிடங் கொடுத்தல் என்று கட்டளை நூல் கூறும். இதில் காலம் இடம் என்ற இரண்டின் சேர்க்கையும் புலப்படும். ஆங்கிலத்தில் இருபதாம் நூற்றாண்டு அறிஞர்கள் இதை Space - time (இடம் காலம்) என்கிறார்கள். இதன் தன்மைதொழில் முதலியன சூக்குமமாகவே யிருக்கும். ஸ்தூலத்தில் அதிகமாக ஒன்றும் தெரியாது. ஓசையென்பது ஆகாசத்தில் எழுவது. ஈதர் (Ether) என்ற ஒரு சூக்கும வஸ்து ஆகாசத்தில் இடைவெளி யின்றி எங்குமுளது. ஓசை இவ் ஈதரில் அலையோட்டத்தை உண்டாக்குகிறது. இவ்வோட்டத்தை ஏற்கும் கருவிகளுக்குத்தான் இவ்வோசை கேட்கும். சில ஓசைகள் சிலஅடிகள் தூரம்தான் கேட்கும். பீரங்கி வெடி பலமைல்கள் கேட்கும். அலையின் அளவையும் ஏற்கும் கருவியின் நுட்பத்தையும் பொருத்தது ஓசை கேட்கும் சாத்தியம். இங்கிலாந்தில் பாடுவதைக் கம்பி இல்லாத் தந்தி என்ற (Wireless-வயர்லெஸ்) கருவி கொண்டு இந்தியாவில் கேட்கலாம். அஃதேபோல்பாடுகிறவர்களையும் காண்பதற்கும் டெலிவிஷன் (Television) என்ற சாதனமுண்டு. ஓசையலைகளைப் பிடிப்பதைப் போலவே ஒளியலைகளையும் பிடித்தால் தூரப்பார்வை ஏற்படும். உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களிலும் எலக்ட்ரான்ஸ் (Electrons) புரோடான்ஸ் (Protons) என்ற இரண்டு தான் உள்ளனவென்றும், அவைகளின் தொகையும் நிலையும் மாறி மாறியிருப்பதால்தான் பலவகையான அணுக்களும் பொருள்களும் உள்ளனவென்றும் இந்நூற்றாண்டின் ஆராய்ச்சி கூறுகின்றது.

இதோடு தினசரி வாழ்வில் பௌதிக அறிவு என்ற பாடத்தை முடித்து விடுவோம். சுபம்.

# மூலமந்திரம் ஓதல் *

[திரு. P. பொன்னரங்க முதலியார் அவர்கள், B. A.]

மெய்யன்பர்களே!

இன்று இங்கு ஒரு சொற்பொழிவு நிகழவேண்டுமென்று என்னிடம் தெரிவித்த என் நண்பர் விருப்பத்திற் கிணங்கி நான் மூல மந்திரம் ஓதுதல் என்னும் அரிய பெரிய விஷயத்தைப்பற்றிப் பேசத் துணிந்திருக்கிறேன். இவ்விஷயத்தில் அதிக அனுபவமுள்ளவர்களும் பக்தி, சிரத்தை, கல்வி, கேள்வி, ஒழுக்கம் முதலியவற்றால் சிறந்தவர்களுமே இதைப்பற்றிப் பேசுவதற்கு அருகராவர். ஆயினும் உங்கள் முதிர்ந்த அன்பின் உதவியைக் கொண்டும், தெளிந்த ஞானத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டும் ஏதோ சிறிது பேச முயல்வதில் நிகழும் குற்றங்களை நீங்கள் பாராட்டாமல் நான் எடுத்துக் காட்டும் மேற்கோள்களின் மகிமையை நன்குணர்ந்து, அவைகளைப்பற்றி ஆலோசித்து இந்த விஷயத்தை ஐயந்திரிபற உணருமாறு உங்களுக்கு உதவி செய்ய "இறைஞ்சு சுகராதியான தொன்னீர்மையாளர்க்கு மானிடம் வகுத்த" அருளைத் துணையென்று நம்பி இந்த விஷயத்தைத் தொடங்குகிறேன்.

தமிழில் பேசப்பயிலும் ஒவ்வொரு குழந்தையும் முதலில் அம்மா, அப்பா, தாத்தா என்று தான் பேசும். ஆகவே, ஒரு தமிழ்க் குழந்தை ஆரம்பத்தில் அ, த என்னும் எழுத்துக்களைத் தானாகவே பிரயோகிக்க ஆரம்பிக்கிறது. இந்த எழுதுக்களின் சேர்க்கையே "அத" என்னும் பிரணவம் அல்லது மூல மந்திரம். இதுவே மூல மந்திரம் என்று வேதத்தின் முதலில் கூறி யிருப்பதாக சுவாமி தயானந்தர் சத்யார்த்தப் பிரகாசிகையில் விளக்கி யுள்ளார். (அதிலிருந்து சில பாகங்கள் அப்பொழுது படிக்கப்பட்டன). "பெரு நெறியாகிய பிரணவம் ஓர்ந்து" என்று திருமூலர் சொல்லி யிருப்பதால் பிரணவம் ஓர்வது அவசியம் என்று தெரிகிறது. அருட்பாவிலும் "ஒருமையுடன்" என்னும் தொடக்கத்த பாட்டில் "பெரு நெறி பிடித்தொழுக வேண்டும்" என்கிறார். திருவாசகத்திலும் சிறு நெறிகள் சேர்ந்தால் திருவருளையடைய முடியாதென்று "நெறியல்லா நெறிதன்னை...." என்ற தொடக்கத்துப் பாட்டில் விளக்குகிறார்.

இந்தப் பிரணவத்தைச் சாதாரணமாய் அ, உ, ம் சேர்ந்த ஓம் என்னும் ஓரெழுத்தொரு மொழியாக சைவ நூல்களிலும், வைணவ நூல்களிலும் நாம் காண்கிறோம். தமிழில் அ என்பது எட்டைக் குறிப்பதாலும், உ என்பது இரண்டைக் குறிப்பதாலும், இரண்டும் சேர்ந்து பத்து என்னும்

* இது, சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் குகாநந்த நிலையத்தில் திரு. P. பொன்னரங்க முதலியார் அவர்கள் B. A. 13-4-32ல் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம்; திரு. G. கலியாணம், B. A. Dip. Ec., கைக் குறிப்புகளினின்றும் வரையப்பட்டது.

தொகையைய என்பது குறிப்பதாலும், பிரணவத்தைச் சொல்லாமற்சொல்ல விழைபவர் "எட்டும் இரண்டும்" என்றே குறிப்பர். திருவாசகத்தில்,

"பட்டி மண்டபம் ஏற்றினை எட்டி யிரண்டும் அறியேனையே"

என்று திருச்சதகத்தில் வருவது நோக்கத்தக்கது.

"எட்டுமி ரண்டும் அறியாத பேதை
ஏழை நான் ஐயே"

என்று நந்தனர் சரித்திரத்தில் படித்திருக்கிறோம். பெரியாழ்வாரும் "மூல மாகிய ஒற்றை யெழுத்தை மூன்று மாத்திரை உள்ளேற வாங்கி" என்று கூறியிருக்கிறார். பெரிய திருமொழியில் "ஓர் எழுத்து ஓர் உருவானவனே" என்று கூறப்பட்டிருக்கிறது. திருமழிசையாழ்வாரும் "எட்டினோடிரண்டெனும் கயிற்றினால் மனந்தனைக்கட்டி வீடிலாதவைத்தகாதல் இன்பமாகுமே" என்று கூறுகிறார். ஆகவே, பிரணவஜபம் சைவர்களுக்கும் வைணவர்களுக்கும் பொது என்று சொல்லலாம். மற்றும், "எட்டாம் எழுத்தை ஏழையேற்குப் பகர்ந்த முத்தா" என்று 'அச்சா' என்னும் தொடக்கத்துத் திருப்புகழிலும், "ஒரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே" என்று இன்னொரு திருப்புகழிலும், "ஓம் எனும் உபதேசவித்துடன் அணைவோனே" என்றுவேறொரு திருப்புகழிலும் சொல்லியிருப்பதால், குமரகுரு அருணகிரியாருக்கு முதலில் உபதேசித்தது பிரணவம் என்றே சொல்லலாம். கந்தரநுபூதியில் வரும் மகாவாக்கியம் பின்னர் உபதேசிக்கப்பட்டதுபோலும். ஏனெனில், உபதேசக்கிரமத்தைத் தமது அரிய நூலாகிய திருப்பாவில் விளக்கும் பாம்பன் சுவாமிகள், முதலில் சமய தீக்கையாகிய ஐந்தெழுத்து அல்லது ஆறெழுத்து உபதேசமும், பிறகு விசேட தீக்கையாகிய ஓங்கார உபதேசமும் செய்யப்படல்வேண்டும் என்று உணர்த்துகிறார். இவைகளின் பின்னர் நிர்வாண தீக்கையாகிய மகாவாக்கியம் உபதேசிக்கப்படவேண்டும் என்று தோன்றுகிறது. இந்த மூன்று தீக்கைகளும் கைவரப்பெற்றவர்கள்தாம் திருமூலர் திருமந்திரத்தை ஓதுவதற்கு அருகர் என்று அதிலுள்ள முகவுரையால் அறிகிறோம். முதலில் ஐந்தெழுத்து அல்லது ஆறெழுத்து உபதேசம் பெறுபவர்கள்கூட இயமம் நியமம் முதலிய ஒழுக்கம், ஆசாரம் உடையவர்களாய் இருத்தல்வேண்டும் என்று பலர் சொல்வர். ஆயினும் திருஞானசம்பந்தர் தம் அருமைத் திருவாக்கால் இப்படிப்பட்ட நிபந்தனை அவசியமில்லையென்று இந்தப் பாசுரத்தால் விளக்குகிறார்.

"கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லாரேனு மியம்புவ ராயிடில்
எல்லாத் தீங்கையு நீங்குவ ரென்பரால்
நல்லார் நாம நமச்சிவாயவே"

எப்படிப்பட்ட தீங்கை யிழைத்தவர்களாயினும் எம்பெருமான் நாமமாகிய ஐந்தெழுத்தால் புனிதராகக் கூடும் என்பது கூன்பாண்டியனுக்கு அவர் அநுசரித்த முறையால் விளங்குகிறது. இக்கருத்தை வற்புறுத்தும் பொருட்டே இன்னொரு பாசுரம் அவர் திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார்.

"நாக மேழ்புக லாடின ராயினு
முறைசெய் வாயின ராயி னுருத்திர
ரிவியே புகுவித்திடு மென்பரால்
வாதனும நமச்சி வாயவே"

இப்படிப்பட்ட பரிசுத்தமாக்கும் தன்மைத்தாகிய ஐந்தெழுத்தை ஒருவன் இடைவிடாது உச்சரித்தால் அவன் நெஞ்சகத்தில் எம்பெருமான் கோயில் கொள்வார் என்பதைத் திருமூலர்,

"அஞ்சுக அஞ்செழுத் துண்மை யறிந்தபின்
நெஞ்சகத் துள்ளே நிறையும் பராபரம்"

என்பதால் விளக்குகிறார். இங்கே அஞ்சுக என்பதை அஞ்சு+உக என்று பிரித்து, பஞ்சமலங்கள் நீங்க எனும் பொருளில் கொள்ளவேண்டும் என்பது ஒழிவிலொடுக்கத்தில் "அஞ்செழுத்தால் பஞ்சமலக் கொத்தறும்" என்று சொல்லியிருப்பதால் அறிகிறோம். இந்தப்பஞ்சமலங்களாவன: ஆணவம், மாயை, கன்மம், வைந்தவம் அல்லது மாயேயம், திரோதாயி. இவைகளில் முக்கியமாய் உயிரை வாட்டுவது ஆணவம் என்னும் சகஜமலம். (அநாதி யியற்கை மலம்) மாயை கன்மங்கள் (ஆகந்துகம் அல்லது அநாதி செயற்கை) நமக்குத்துணையாயிருந்து ஆணவத்தை நீக்கஉதவிபுரிவன, (ஒரு துணியிலிருந்த அழுக்கை நீக்க வண்ணான் மற்றொரு அழுக்காகிய சவுக்காரத்தை உபயோகிப்பதுபோல்). கன்மம் என்பது சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியம் (தொகுவினை, துவக்கவினை, ஏறுவினை) என்னும் மூன்று பிரிவுடையது. இவைகளில் பிராரத்துவம், நம் உடம்புள்ளவரைக்கும் நம்முடன் இருந்து சுக துக்கங்களாக நம்மை அனுபவிக்கச் செய்வது. பாம்பன் சுவாமிகள் அதை 'உடம்புக்கும் உயிருக்கும் நீங்காத சேர்க்கையாக ஏற்பட்ட பிசின்' என்பர். சஞ்சிதம் குருகடாட்சத்தால் நீங்கிப்போகும். (ஒருபெரிய பஞ்சுமூட்டை ஒருசிறுதீப்பொறியால் எரிந்தொழிவதுபோல). ஆகாமியம் ஈசுவரார்ப்பணமாய்க் கர்மங்கள் செய்யப்படுபவர் இடையில் தோன்றாமலே இருக்கும், (வறுத்த விதை முளைக்காததுபோல). ஏனைய மாயேயம், திரோதாயி கடவுளுடைய அருட்சத்தியின் அம்சமாகிய பராசத்தி, ஆதிசத்தியாக இருந்து நம்மை ஈடேற்ற உதவிசெய்யும். அந்த மாயேயத்தில் சேர்ந்தது பிரணவம். பிரணவ ஜபம் மிகவும் அவசியம் என்பது பிரணவத்தை விநாயகராகக் குறித்திருப்பதால் தெரிகிறது. விநாயகரைக் கும்பிடாமல் சிவனுடைய இரதத்தின் அச்சு முறிந்ததாகத் திருப்புகழில் "கைத்தலம் நிறைகனி" எனும் தொடக்கத்துப்பாட்டில், "அச்சிவன் உறைரதம் அச்சது பொடிசெய்த அதிதீரா" என்று கூறப்பட்டிருப்பதால் அறிகிறோம். ஆகையால்தான் அவருக்கு "விக்கினேசுவரர்" என்ற நாமம் ஏற்பட்டது. அவரைக் கும்பிடாமல் தொடங்கும் காரியங்களுக்கு விக்கினம் செய்பவர் என்றும், அவரைத் தொழுபவர் விக்கினங்களைத் தீர்ப்பவர் என்றும் அந்த நாமத்தின் பொருள். பிரணவத்தைக் கொண்டே ஐந்து கிருத்தியங்களையும் கடவுள் நடத்துவதால் "ஐந்து கரத்

தானைமுகப் பெருமாளே" என்று திருப்புகழில் சொல்லியபடி விநாயகரை ஐந்து கரங்கள் உடையவராகக் காட்டியிருக்கிறது. அந்த ஆனைமுகம் என்பது பிரணவத்தின் வரிவடிவைக் காட்டுகிறது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ளை யானையின்மேல் கைலை சென்றார் என்பது பிரணவ ஜபத்தால் மோட்சம் அடைந்ததைக் குறிக்கும் என்று பாம்பன் சுவாமிகள் சொல்லுகிறார். அ, உ என்னும் இரண்டெழுத்துக்கள் சேர்ந்து ஓ என்றானதை சூரியோதயம், நீலோற்பலம், மதோன் மத்தன் என்ற சொற்றொடர்களால் அறிகிறோம். அ என்பது பதி எழுத்து; அதாவது எழுத்துக்களுக்கெல்லாம் முதலானது; அல்லது பதி என்னும் சிவத்தைக் குறிக்கும் எழுத்து. இ என்பது அபின்ன சத்தி விஷ்ணு அல்லது கங்கையைக் குறிக்கும். உ என்பது பின்ன சத்தி; அதாவது உமை அல்லது உத்தமியைக் குறிக்கும். ("உத்தமி புதல்வன்" என்று திருப்புகழில் விநாயகரைச் சொல்லப்பட்டிருக்கிறது). "அகரமுதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே யுலகு" என்னும் குறளையும், "ஆரும் அறியார் அகாரம் அவன் என்று, பாரும் உகாரம் பரந்திட்ட நாயகி" என்னும் திருமந்திரத்தையும் நான் இங்கே உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். திருமூலர் திருமந்திரத்தில் பிரணவசமாதி என்னும், மோன சமாதி என்னும் தலைப்புகள் கொடுத்து சில பாக்களை யெழுதியிருக்கிறார். ஆகவே, திருமூலர் திருமந்திரம் படிப்பதும் நமது கடமை என்று நாம் எடுத்துக்கொண்ட சொற்றொடரின் பொருள் என்று கொள்ளலாம். "காலை எழுந்து கருத்தறிந்து ஓதிடின், ஞாலத் தலைவனை நண்ணுவர் அன்றே" என்று திருமூலர் திருமந்திரத்தில் சொல்லி யிருப்பது கவனிக்கத்தக்கது. அகார உகாரத்தின் சேர்க்கையால் வந்த ஓகாரத்தை சிவனுக்கும் சத்திக்கும் பிறந்த விநாயகராகக் கொண்டாடுவது பாராட்டத் தக்கதே. ஆகையால்தான் பிரணவத்தில் மூன்றாவது எழுத்தாகிய மகரம் பாசம் குறிக்கின்றதென்று சொல்லாமல் குடிலையாகிய விநாயகரைக் குறிப்பதாக ஓர் அன்பர் "திருமூலர் உபதேசப் பகுதி" யென்னும் தம் நூலில் காட்டுகிறார். அதேமாதிரி சத்து, சித்து சேர்ந்து ஆனந்தம் ஆகிய முருகர் பிறந்ததாகவும் சொல்வர். ஆகவே விநாயகரும், முருகரும் ஒன்றே யென்று சொல்லலாம். இதேமாதிரி உ, ம், அ சேர்ந்து உமா ஆவதால் சத்தியே விநாயகர் என்றும் சொல்லலாம். இதனால் விநாயகர், முருகர், சத்தி, சிவம் ஆகிய நால்வரும் ஒரே மூர்த்தியைக் குறிக்கும் என்பதை மறக்கொணாது. இந்த ஒரு மூர்த்தி வழிபாட்டைக் கொள்ள வேண்டியதே நமது கடமை என்று பாம்பன் சுவாமிகள் வற்புறுத்துகிறார். இந்தப் பிரணவம் ஐந்து கிருத்தியங்களுக்கும் காரணமாய் இருப்பதால் இதை ஐந்தாகப் பிரிக்கிறார்கள். அந்தப் பிரிவுகள் அ, உ, ம், விந்து, நாதம் என்பன. ஆகையால்தான் இதை ஓங்காரமாகிய ஐந்தெழுத்தென்பர். சிவபஞ்சாட்சரத்திலுள்ள ஐந்தெழுத்துக்களை இவைகளுக்கு ஒப்பிடுவர். அந்த பஞ்சாட்சரத்தில் ந திரோதாயியையும், ம ஆணவமுதலிய மலங்களையும், ய ஜீவனையும், வ வழி அல்லது வாலை அல்லது வாமி என்கிற சத்தியையும், சி என்பது சிகரமாகிய சிவத்தையுங் குறிப்பதாகச் சொல்வர். இப்படி இந்த

ஐந்தெழுத்தின் கருத்தை அறிந்து ஓதுவது பிரணவஜபத்திற்குச் சமான மாகும். ஆகையால்தான் மூலமந்திரம் என்பதற்குச் சிவபஞ்சாட்சரம் என் றும் சொல்வர். பெரிய புராணத்தில் "ஆதிமந்திரம் அஞ்செழுத்தோது வார் நோக்கும்" என்று சம்பந்த சுவாமிகள் புராணத்தில் காட்டப்பட் டிருக்கிறது. இதேமாதிரி முருக வழிபாடுடையார் ஆறெழுத்தை மூலமந்திர மாகக் கொண்டாடுவர். இந்த ஆறெழுத்து சகரம் ஆதியாகிய சரவணத் தில் உற்பவித்தவனே என்னும் பொருளுடையது. ஆனல் கந்தரனுபூதி யில் "நாதா" என்னும் தொடக்கத்த பாட்டில் குமரனுக்கு நமஸ்காரம் என் னும் பொருள்படும் ஆறெழுத்தைக் காட்டி யிருக்கிறது. அதை நச்சினர்க் கினியர் ஆறெழுத்தென்று சொல்வர். இதில் ரா, ம, என்னும் எழுத்துக் கள் வருவது கவனிக்கத்தக்கது. ராம என்பது தாரக மந்திரம் என்று வைணவர் சிலாகிப்பர். அரா, உமா சேர்ந்து ராம என்று ஆனதாகச் சைவர் சொல்வர். இது நிற்க, மேற்சொன்ன ஆறெழுத்தில் ரா என்னும் எழுத் துக்குப் பின்னல் ய என்பதை வருவித்துக் கொள்ளவேண்டும். அப் பொழுது தான் சூக்கும பஞ்சாட்சரத்தின் இடையில் ஜீவனைக் குறிக்கும் ய என்னும் எழுத்தும், அதன் பின்னே பாசத்தைக் குறிக்கும் நம என் னும் எழுத்துக்களும், இருப்பது போல் இந்த ஆறெழுத்திலும் குமரா என்பதற்குப் பிறகு ஜீவனைக் காட்டும் 'ய' காரமும், பாசத்தைக் காட்டும் 'நம'வும் சேர்ந்து அதைப் பூர்த்தி செய்தது போலாகும். இவ்விதம் பார்த் தால் சகரம் என்னும் தொடக்கத்து ஆறெழுத்தில் ஜீவனும், பாசமும் இல்லையென்பது விளங்குகிறது. இதற்காகத்தான் அதனுடன் 'ய, நம' என்பவைகளைச் சேர்த்துப் பாம்பன் சுவாமிகள் திருவலங்கற்றிரட்டில்,

"இன்று சரவண பவாயநம: என்பதற்கு நாவே அன்றென் செய்தாயோ அறம்"

என்று காட்டுகிருர். இந்த சொற்றொடரை ஒன்பதெழுத்தென்றும், இதற்கு முன்னல் ஓர் எழுத்தாகிய பிரணவத்தை உடைய சொற்றொடரைப் பத் தெழுத்தாகவும் சுவாமிகள் பரிபூரணனந்த போதத்தில் காட்டுகிருர். ஆனல் எந்த விதமான ஆறெழுத்தாயினும் சரி, நாம் உச்சரிக்கு முறை, தகுந்தவரால் அறிந்த பிறகு விதித்த காலங்களில் குறித்த முறைப்படி உச்சரிப்பதே ஒழுங்கு. இல்லாவிட்டால் அந்த மந்திரம் கெடுதி செய்யும் என்று அவர் வற்புறுத்துகிருர். அதாவது காலை, உச்சி, மாலையில் ஆசாரியர் மூலமாய் அறிந்தபடி ஓர் ஆசனத்திலிருந்து இடைவிடாமல் இரு பாலாரும், பிணி மூப்பு முதலிய காலங்களிலும் உச்சரிக்கலாம் என்றும், மூன்றுஎழுத்துக்களைச் சேர்த்து உச்சரிக்கவேண்டுமென்றும், தனித்தனியாக உச்சரிக்கக்கூடாதென் றும் அவர் விளக்குகிருர். ஆனல் பிரணவத்துடன் உச்சரித்தால் அதிக நன் மையென்று பக்த விஜயத்தில் உள்ள ஜெய தேவர் சரித்திரத்தால் அறிகி ருேம். இதேமாதிரி அஞ்செழுத்துக்கு முன்பும் பிரணவத்தைச் சேர்த்து உச்சரிப்பதால் அதிக நன்மையுண்டென்று அறிகிருேம். அப்பொழுது அந்தச் சொற்றொடர் பஞ்சாக்கர சடாட்சரம் என்பர். முன்பு சொன்னது ஓங்கார சடாட்சரம். இந்த மந்திரங்களை உச்சரிக்கும்போது சித்தம் அவை

கள் மாட்டு அழுந்தவேண்டும். அப்பொழுதுதான் நாம் மாயையை வெல்ல லாம்; பவக்கடலையும் கடக்கலாம். அப்பர் சுவாமிகள் கல்லால் கட்டப்பட்டு சமணர்களால் கடலில் போடப்பட்டபோது ஐந்தெழுத்து ஓதித்தான் கரை யேறினர் என்பது நமக்கு நன்ருய்த் தெரியும். அப்படி அவர்மாத்திரம் அல்ல நாமும் அவரைப்போல் ஈடேறக்கூடும் என்று அருட்பாவில்,

"சீர்தரு நாவுக் கரையரைப் போலச் சிறியனுமோர்
கார்தரு மாயைச் சமணன் மனக்கருங் கல்லிற்கட்டி
பார்தரு பவக்கட லிடைவீழ்த் திடப் பட்டு ழன்றே
யேர்தருமைந் தெழுத்தோதுகின்றேன் கரையேற் றாசே"

என்று திருவருட் பிரகாச வள்ளலார் திருவாய் மலர்ந்தருளுகிருர். இங்கு சமணல் என்பது மாயை என்றும், கல் என்பது மனம் என்றும், கடல் என் பது பிறப்பிறப்பாகிய சம்சார வாழ்க்கையென்றும், அதிலிருந்து கரை யேறுவதற்கு அஞ்செழுத்து அவசியம் என்றும் அறிகிருேம். இங்கு அப் பர் சுவாமிகளை ஜீவாத்மா என்று குறித்திருப்பதுபோல், கஜேந்திர மோட் சத்தில் கஜேந்திரன் ஜீவாத்மா என்றும், முதலை என்பது ஆசை என்றும் கஜேந்திரன் அருந்திய நீர் சிற்றின்பமாகிய சேற்று நீர் என்றும், அந்நீரை அருந்தி ஆணவம் அதிகப்பட்டு, தன் சீர் கேடான நிலையை உணர ாத ஆன்மா கடைசியில் தான் அலட்சியமாகக் கருதின முதலையினின்று தன்னை விடுவித்துக்கொள்ள முடியாமல் கடவுள் அருளை நாடவேண்டி யிருந்ததென்றும் சொல்வர். அருட்பாவில் "ஆசையங்கரா" என்று ஒரு பாட்டில் சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது. "பெரும் பைம்புனத் துள் சிற்றேனல் காக்கின்ற பேதை கொங்கை விரும்புங் குமரன்" என்னும் கந்தாலங்காரப் பாட்டின் பாகத்திற்கு உரை யெழுதியவர், தினைப்புனம் நெஞ்சம் என்றும், அதைக் காக்கும் வள்ளி ஜீவாத்மா என்றும், சிற்றேனல் என்பது அற்பசுகத்தைத் தரும் மண், பெண், பொன் என்றும், கொங்கை என்பது ஆன்மாவின் பக்குவ நிலை என்றும் குறிக்கிருர். இதேமாதிரி கந் தைத்துணி சுட்டியிருந்த குசேலர் கண்ணபிரானை நாடிப்போய்க் குபேர சம் பத்துடன் திரும்பினது, ஜீவாத்மா தேகக் கந்தலுடன் கடவுளிடம் போக முயன்று, அவர் அருளைப்பெற்று, பேரின்பமாகிய செல்வத்தை அடைந்த தென்றும் சொல்வர். பட்டினத்தார் "ஆங்காரக்களஞ்சியம்" என்ற தொடக் கத்த பாட்டில் தேகக் கந்தல் என்று தூல தேகத்தைப்பற்றிச் சொல்வது இங்கு குறிக்கத்தக்கது. அத்யாத்ம இராமாயணத்திலும், இராமர் ஜீவாத்மா என்றும், தசரதர் பரப்பிரமம் என்றும், அவர் மூன்று மனைவிகள் இச்சை ஞா னக் கிரியாசத்திகள் என்றும், சீதை ஆனந்தம் என்றும், வசிட்டர், விசுவா மித்திரர் சிரவணம் (கேட்டல்), மனனம் (சிந்தித்தல்) என்றும், அனுமார் நிதித் தியாசனம் (தெளிவு) என்றும், சஞ்சீவிமலை நிட்டை என்றும், வாலி பயம் என்றும், வானரர் சுபவாசனை யென்றும், இராக்கதர் அசுபவாசனை என் றும், கும்பகர்ணன் தமோகுணம் என்றும், இராவணன் இராஜஸ குணம் என் றும், விபீஷணர் சத்துவகுணம் என்றும், இலக்குமணர் வைராக்கியம் என்

றும், அயோத்தி மோட்சம் என்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளால் ஜீவன் பரப்பிரமத்தை யடைவதற்கு அவன் அருள் வேண்டும் என்றும், அதற்குச் சிறந்த சாதனம் ஐந்தெழுத்து அல்லது ஆறெழுத்து அல்லது பிரணவம் ஓதுதல் என்றும் அறிகிறோம். அதேமாதிரி பிரணவத்தினின்று தோன்றிய அத்வைத மந்திரமாகிய சோகம் என்பதையாவது, அஜபாகாயத்திரியாகிய அம்சோகம் என்பதையாவது ஆகம வாக்கியமாகிய சிவோஹம் என்பதை யாவது தக்கார் பால் கேட்டு உச்சரிக்கலாம்.

இந்த மந்திரங்களில் யாதாவது ஒன்றைத் தக்கவர் மூலமாய் உணர்ந்து விதித்த காலங்களில் சொல்லவேண்டும் என்று முன்னமே காட்டி யிருக்கிறேன். அப்படி சில காலம் சென்ற பிறகு ஒழிந்த நேரங்களிலெல்லாம் அந்த மந்திரத்தைச் சொல்வதுதான் சகச நிலையாகும். அந்த நிலையிலிருப்பவர்கள் "நற்றவாவுனை நான் மறக்கினும் சொல்லு நா நமச்சிவாயவே" என்று சொல்லக்கூடியவர்கள். அவர்கள் கூற்றுவனுக்கும் அஞ்சவேண்டுவதில்லை. "கூற்றை அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே" என்பர் சம்பந்த சுவாமிகள். இது எப்படி சாத்தியம் என்பதைத் திருமூலர் "திருமந்திர உபதேசப் பகுதி"யில் விளக்கி யிருக்கிறார். ஒரு மனிதன் சாதாரணமாய் 12 அங்குலம் மூச்சை வெளியில்விட்டு, 8 அங்குலம் உள்ளுக்கிழுக்கிறான் என்றும், அப்படி 16 மாத்திரை உள்ளுக்கிழுத்து 64 மாத்திரை உள்ளே நிறுத்தி, 32 மாத்திரை சுவாசம் வெளியே விட்டால் அவன் வீணாய் 4 அங்குலம் வெளியில் விடமாட்டான் என்றும்,

16 சத்ரு (பூரகம் - சிவ - சா) $= 16 \times \frac{8}{12}$ அல்லது $10\frac{2}{3}$.

64 சத்ரு (கும்பகம் - ய - ஹண) $= 64 \times \frac{4}{12}$ அல்லது $21\frac{1}{3}$.

மொத்தம் 32.

32 சத்ரு (ரேசகம் - நம - பவ) $= 32 \times 1 = 32$.

நிகாம் 0 (நஷ்டமில்லை.)

ஆகையால் இடைவிடாது தைல தாரைபோல் மூல மந்திரத்தை ஜபிப்பது மாயையை நீக்குவதற்கும், அஞ்ஞானத்தைப் போக்குவதற்கும், கூற்றை உதைப்பதற்கும் (காலத்தை வென்றிருப்பதற்கும்) சிறந்த சாதகம் என்றும் அறிகிறோம். ஓங்காரத்தைத் தனித்தாவது, ஐந்தெழுத்து அல்லது ஆறெழுத்துடன் சேர்த்தாவது ஜெபிப்பது ஞானமாகிய உச்சியேறுவதற்கு அனுகூலம் என்பதைப் பாடுதுறையில் "ஓங்காரத்துட் புகுந்து உச்சியேறி ஒன்பது துவாரத்தின் உட்புகுந்து தூங்காமல் தூங்கி நின்றாடாய் பாம்பே" என்று சொல்லப்பட்டிருப்பதால் அறியலாம். ஆனால் மந்திரங்களை முன்பின்மாறி உச்சரிக்கக்கூடாது; அசிரத்தையுடன் உச்சரிக்க கூடாது; உள்ளுக்குள்ளேயே ஜபிப்பது சிறந்த பலனைத் தரும். "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி" என்று தேவாரத்தில் கூறியிருப்பது

போலும், "அன்போடுருகி அகங்குழைந்து" திருமந்திரத்திற் கூறியிருப்பது போலும் உச்சரிக்கவேண்டும். அப்போதுதான் அந்த ஜபம் நம்மை ஞானமாகிய நன்னெறிக்கு உய்க்கும். அதனால் மோட்சமாகிய பந்த விடுதலையைப் பெறலாம். அப்பொழுது என்றும் அழியாத இன்பத்தை அநுபவிக்கலாம். இப்படிப்பட்ட இன்பத்தை அடைவதற்கு "எட்டும் இரண்டும் மூற்படி." என்று அருட்பாவில் சொல்லியிருக்கிறபடி சிறந்த சாதனமாகிய மூலமந்திரம் ஜபிப்பதை நீங்கள் கடைப்பிடிக்குமாறு எல்லாம் வல்ல திருவருளை வேண்டுகிறேன்.

# பெரிய புராண இடைச்செருகல்கள்

[சி. கே. சுப்ரமண்ய முதலியார், பி. ஏ.]

(சென்னைச் சர்வகலாசாலைப் பிரசங்கம்)

[இதழ் ௪. ௧௦௭-ம் பக்கத் தொடர்ச்சி]

இனி, முழு நீறு பூசிய முனிவர் புராணத்திலே ஒன்று முதல் ஐந்து வரை உள்ள பாடல்கள் ஐயப்பாடுள்ளன. திருநீற்றின் பிறப்பும் வகையும் பிறவுமாகிய இவ்வரலாறு இங்கே தருதல் அவசியமாகக் காணவில்லை. இப்பாடல்களின் போக்கும் சேக்கிழார் திருவாக்கினின்றும் வேறு படுகின்றன. முழு நீறு பூசிய முனிவர் புராணத்தில் திருநீற்றைப்பற்றிய வரலாறுகளை எல்லாம் தொகுத்து விரித்துக் கூறுவது அவசியமாயின், அதுபோலவே பத்தராய்ப் பணிவார் புராணத்தில் பத்தியைப்பற்றியும், பாமாலையே பாடுவார் புராணத்திலே பாடல்களின் வகை விரிவுகளையும், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் புராணத்தில் சித்தம் முதலிய கரணங்களின் வரலாறுகளையும், திருவாரூர்ப் பிறந்தார் புராணத்திலே திருவாரூர் வரலாறுகளையும், முப்போதும் திருமேனி தீண்டுவார் புராணத்துள்ளே திருமேனிகளின் வகை தொகைகளையும் விரித்துச் சேக்கிழார் சுவாமிகள் பேசியிருக்க வேண்டுமல்லவா? திருநீற்றினைப்பற்றிய ஒருவகை வரலாற்றைச் சண்டேசுர நாயனார் புராணத்திலே ஆசிரியர் சொல்லியிருப்பதும் காணத் தக்கது.

எனக்குச் சமீப காலத்தில் பெரிய புராணத்துப் பழைய ஏட்டுப்பிரதி மிகவும் சிதைவுற்றுக் கிலமாய்ப் போன பிரதியில் சில தாள்கள் மட்டும் கிடைத்தன. அவற்றிற் பார்க்கும்போது இப்புராணப் பகுதி எழுதியுள்ள ஏட்டுத் தாள் ஏறக்குறைய அதிகச் சிதைவில்லாமல் கிடைக்கப் பெற்றேன். அதில் 'சாதியினிற்றலையான தர்ம சீலர்' என்று இப்போது அச்சுப் பிரதிகளில் இப்புராணம் 6-வது செய்யுளாகப் பிரசுரிக்கப்பட்டிருக்கும் ஒரே பாசுரத்தோடேயே இப்புராணம் நிறைவேறியுள்ளது. ஆதலின் 1 முதல் 5 வரை உள்ள திருநீற்றின் வரலாறுகிய இவ்வைந்து பாடல்களும் பிற்காலத்து யாராலேயோ எழுதிச் சேர்க்கப்பட்டன என்று நான் கொண்டிருந்த ஐயம் வலியுறுகின்றது....................

இன்னும் ஷ சிதலமாகக் கிடைத்த தனி ஏடு இதழ்களை ஆராயும் போது இப்போது அச்சுப் பிரதிகளிற் காண்கின்ற பாமனையே பாடுவார் புராணத்துப் 'புரமூன்றும் செற்றானை' என்ற முதற் பாட்டும் திருவாரூர்ப் பிறந்தார் புராணத்து 'அருவாகி' என்ற முதற் பாட்டும்; பூசலார் நாயனர் புராணத்து 'அன்றினர் புரமெரித்தார்' என்ற முதற் பாட்டும் இல்லாமலே எழுதப் பெற்றிருக்கின்றன. ஆகவே இம்மூன்று பாடல்களும் பிற்காலத்துப் புலவர் யாரோ இதிற் சேர்த்திருத்தல் கூடுமென்று ஐயப்படவேண்டியிருக்கின்றது.

ஆகவே அச்சுப் பிரதிகளில் அதிகமாகக் காண்கின்ற 25 பாடல்களில் மேலே குறித்தபடி 24 பாடல்கள் தான் எளியேனது சிற்றறிவிற் பெற்ற வகை சேக்கிழார் திருவாக்கு அல்லாத இடைச் செருகலாயிருக்கும் என்பது எனது தாழ்மையான எண்ணம். மேலும் மிகுந்த பாடல்களையும் நான் குறிக்க இப்போது இயலவில்லை. மேலே எனக்குக் கிடைத்த பழைய சிதைந்த ஏட்டுத் தாள்களில் திருஞான சம்பந்தப் பிள்ளையார் நாயனர் புராணத்து ஆக மொத்தம் செய்யுள் 1253 என்று கண்டிருக்கிறது. அதன்படி இப்போது அச்சுப் பிரதிகளில் அதிகச் செய்யுள் 3 மட்டும் காண்கின்றது. ஆனல் அடியேன் மேலே காட்டிய கொள்கையின்படி 7 செய்யுள்கள் வரை ஆளுடைய பிள்ளையார் புராணத்திலே நுழைந்து கொண்டதாக ஆகிறது. இந்த இடைச்செருகல்கள் யாவும் ஒரே காலத்து ஒருவராலேயே செய்யப்பட்டன என்று கொள்வதற்கு மில்லை. பொது வகையால் பிற்காலத்திருந்த வெள்ளி யம்பலத் தம்பிரான் (இவர் தர்மபுர ஆதீன முனிவர்களில் ஒருவர் என்றும் திருவிளையாடல் இயற்றிய பரஞ்சோதி முனிவரின் உறவினர் என்றும், சிவப் பிரகாச சுவாமிகளுக்கு இலக்கணங் கற்பித்த ஆசிரியர் என்றும் சொல்கிறார்கள்) என்பவர் தலையிலேயே பெரிய புராணத்திலும் தேவாரங்களிலும் தமது பாடல்களை இடைச் செருகலாக நுழைத்த குற்றம் பொது வகையாகச் சுமத்தப்படுகிறது. அவர் ஒருவரே யல்லாது வேறு சிலரும் இக்காரியம் செய்திருத்தல் கூடுமென்று நினைக்க இடமிருக்கின்றது.

மேற்கூறியபடி எனக்குக் கிடைத்த சிதைந்த தாள்களில் முனையடுவார் நாயனர் புராணத்திலே அச்சுப்பதிப்பிற் காணும் 6-வது செய்யுளாகிய 'யாவரெனினும்' என்ற பாட்டு காணவில்லை. ஆனல் இப்பாட்டும் இடைச் செருகல் என்று கொள்ள என் மனம் துணியவில்லை. அந்த ஏடு எழுதினவர் அதனைத் தவருக விடுத்து எழுதி யிருந்தாலும் இருக்கலாம். இடைச் செருகல்களைப்பற்றிய பேச்சை இத்துடன் நிறுத்துவோம்.



# எலும்புக் கூட்டில் உயிரைப் படைத்தல்

[குறிப்பு:—இது சில நாட்களுக்குமுன் எல்லாப் பத்திரிகைகளிலும் தந்திச்செய்தியாக வெளியிடப்பட்டது. "ஈமிலா அங்கம் உயிர் எய்த ஏற்றிய" திருஞான சம்பந்தர் திருவருட்செயல், மேல்நாட்டு அறிவியலாராய்ச்சிக்கும் உடன்பாடே யென்பது பற்றி இதை மிக மகிழ்ச்சியோடு வெளியிடுகிறோம்.—பத்திராசிரியர்.]

ஆராய்ச்சி யென்பதைக் கட்டிக் கடலிலெறிந்து விட்டு விரக்தி வேதாந்த போதை பருகி நம் நாடு தூங்கிக்கொண்டிருக்க, மேல் நாடுகளில் மிகத் தீவிரமாக நடந்து கொண்டிருக்கும் பலவித ஆராய்ச்சிகள் மக்களைத் திடுக்கிடச் செய்கின்றன. திரு. டபிள்யூ மார்லி மார்டின் என்னும் ஆங்கிலேயர் விஞ்ஞான விற்பனரது உயிராராய்ச்சியால் 'இனி அசாத்திய மென்பதே உலகிலில்லை' என்று நாம் தீர்மானிக்கவேண்டியிருக்கிறது.

சுண்ணாம்புக் கல்லில் ஜீவாதார சக்தியுள்ளதென்றும், அதினின்றும் எப்பிராணியையும் சிருஷ்டிக்கலாமென்றும், பூமியின் கீழ்ப் புதைந்து கிடக்கும் ஜீவாங்குரமானது (ஜீவமுளை) அழிந்தனவாகக் கருதப்படும் பொருள்களிலிருந்து மீன், பல்லி முதலிய சிறு பிராணிகள் உற்பத்தியாதற்குக் காரணமாயுள்ளதென்றும், அவர் தமது நுண்ணிய பூதக் கண்ணாடியைக் கொண்டு செய்த ஆராய்ச்சியிற் றெளிந்துள்ளார்.

டெயிலி ஹெரால்டு பத்திராதிபர் இது பெரிய அற்புதம் என்றும், ஆகவே நம்பத்தகாததென்றும் கூறினார். ஆனால், அவ்வாராய்ச்சியாளர் தாம் கண்டறிந்ததைத் தமது கண்ணாடியின் வாயிலாக அவருக்கு விளக்கிய பின் அவர் நம்பினார். இறந்துபோன பிராணியொன்றின் எலும்புக் கூட்டைக் காட்டி, அது பாறைகளில் வெகு காலம் கிடந்ததாகவும், பின் ஜீவாங்குரத்தினால் புதிதாக உற்பத்தியாகிப் பிறகு இறந்ததாகவும் கூறினார். ஜீவாங்குரத்தினின்றும் சிறு குமிழிகள் குதித்துக் கிளம்பினதையும், அவற்றிலிருந்து ரூபம் தோன்றினதையும், அந்த ரூபம் அசையும் சக்தி பெற்றதையும் அவர் நேரிற் கண்டாராம்.

பல விஞ்ஞானிகள் இவரது ஆராய்ச்சியின் முடிபுகளைக் கண்டு கொண்டு அவற்றை விளக்கித் தாமே கண்டுபிடித்ததாகச் சாதிப்பரென்னுங் காரணத்தால் இவர் தமது ஆராய்ச்சியின் வழிகளை இப்பொழுது வெளிப்படையாகக் கூற இணங்கவில்லை.

ஆயினும், கூடு அழிகிறதே யொழிய அதனுள் தங்கிய உயிர் எக்காலத்தும் அழிவதில்லை யென்றும், கூடு அழிந்த ஒரு பிராணியின் ஜீவாங்குரம் திரும்பவும் வேற்றுருக் கொள்ளத் தயாராயுள்ளதென்றும் இவர் சாதிக்கிறார். பாறையிற் றாம் கண்டுபிடித்த ஜீவாங்குரத்திலிருந்து பல உயிர்ப் பிராணிகளின் ரூபங்களை இவர் சிருட்டித்தாராம். சீமைச் சுண்ணாம்பைப் பரீக்ஷித்ததன் பயனாய்ச் செடியை விருத்தி செய்தாராம். அதன் பின்னரே 'ஏன் இப்படியே மற்ற ஜீவராசிகளையும் விருத்தி செய்யக்கூடாதென ஆராயப் புகுந்தாராம்' இது மட்டுமோ? 'என்றைக்காவது மனிதனையும் கல்லிலிருந்து நான் சிருஷ்டிப்பேன் என்று நம்புகிறேன்' என்று இவர் கூறுகிறார்.



# சொற்பொழிவுக் குறிப்புகள்

[ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி.]

## I நமது வாழ்க்கையின் நோக்கம்

1 (i) பலர் இதுபற்றி எண்ணாமை.

(ii) அறிந்தோ, தெளிவாய் அறியாமலோ, ஏதோ ஒவ்வொருவருக்கும் ஒரு நோக்கம் இருந்து வரல்.

2 வாழ்க்கை × இருக்கை. 'வாழ்க்கை'க்குத் திட்டமான குறிக்கோளிருத்தலின் அவசியம்.

3 குறிக்கோள்களின் தராதரங்கள் :

(i) உடலியற் கிளர்ச்சியின் தேவைகளை அடைதல் : பசி, காமம்.

(ii) சுற்றியுள்ள பொருள்களின் இயல்பை அறிதல்--பாசஞானம்.

(iii) பொருளீட்டம்.

(iv) அதிகாரப் பெருக்கம்.

(v) புகழ்ச்சி வேட்கை.

(vi) மெய்ப்பொருட் காட்சியும் இறைவனிருப்பும் அவன் குறிப்பும் உள்ளவா றுணர்தல்.

4 இம்மிகச் சிறந்த குறிக்கோளின் இருகூறு :

(i) கட்டிலிருந்து விலகிப் பூரணத்துவ மடைதல்—எண்குணம் பதியப் பெறுதல்.

(ii) அதையொட்டி யெழும் மன்னுயிர்த் தொண்டு.

5 (i) பரிபூரண நலம் உண்டோ? உண்டு; பிண்டத்தின் 5 பூதங்கட்கும் அண்டத்தில், ஆதாரமிருத்தல் போல், சிற்றறிவிற்குப் பேரறிவு ஆதாரம்.

(ii) மக்களுள்ளும், அறிவாற்றலில் தராதரமிருக்கு முண்மை.

6 ஆன்மா நித்தியமென்று ஏற்பட்டாலன்றோ இப் பேச்செல்லாம்? ஆம். ஆன்மா என்றும் உள்பொருளே.

(i) London Psychical Research Society செய்துவரும் ஆராய்ச்சிகளும் முடிவுகளும்.

(ii) நமது யோகியர் ஞானியர் அநுபவ வாக்குகளும், செயற்கரும் செயல்களும்.

7 என்ன குறிக்கோள் ஒருவனுக் கேற்றது? அவனே சிந்தித்துத் தெளிந்து தேர்ந்தெடுக்கக் கடவன்.

ஆனல், "உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்."

8 குறிக்கோளெதுவுமில்லா வாழ்வினும், குறுகிய சிறு குறிக்கோளேனு மொன்றிருத்தல் சிறப்பு.

9 குறிக்கோள் தேர்ந்தெடுத்தலுடன் மற்றுந் தேவையாவன :

(i) தேர்ந்தெடுத்த குறிக்கோளை எக்காலத்திலும் மறவாமை.

(ii) அதை அடைய இடைவிடா முயற்சி.
(iii) தடுக்கும் இன்னல்களுக்கு அஞ்சாத தீரம்.
(எடிசன், ஹென்றிபோர்டு முதலியோர் சரிதம்; நந்தனர் மெய்ப்பொருள் நாயனர்.)

10 இந்நாளில் வாழும் நாம் கொள்ள வேண்டிய குறிக்கோள்கள்:
(i) மக்கள் என்னும் முறையில்,
(ii) இந்தியன் என்னும் முறையில்,
(iii) தமிழர் என்னும் முறையில்,
(iv) நாம் வாழும் ஊர் அல்லது ஊர்ப் பகுதியினர் என்னும் முறையில்.
(v) நாம் குடும்ப உறுப்பினர் என்னு முறையில் ஒன்றற்கொன்று பொருந்தி ஒழுங்காய் அமையும்படி குறிக்கோள்களிருக்க வேண்டும்.

11 உலகில் பெருஞ்செயல் செய்தோரெல்லாம் தெளிவான குறிக்கோளைத் தேர்ந்தெடுத்தோரே.
கொண்ட குறிக்கோளினும் சீரிய குறிக்கோள் புலப்படுமேல் அதைப் பின் பற்றுக.

12 உழைப்பிற்கு அஞ்சுதல் பேதைமை.
(i) திரிகாணத்தானும் உழைக்கும் ஆற்றல் மக்கட்குண்டு. உழைக்க.
(ii) 'உழைப்பின் வாரா உறுதிக ளுளவோ?
கழைப்பின் வாராக் கையற வுளவோ?'

---

## II நமது முன்னேற்றம்

1 சொற்பொருள் விளக்கம்.
(i) 'நாம்'—(அ) மக்கள்.
(ஆ) இந்திய மக்கள்.
(இ) தமிழ் மக்கள்.
(ii) 'முன்னேற்றம்'—(அ) தற்சமய நிலை தாழ்ந்துள்ள தென்னும் குறிப்புண்மை.
(ஆ) அடையவேண்டிய இலட்சிய மொன்றுண்மை.

2 மக்களென்னும் வகையில் நமக்கு இருக்கவேண்டிய குறிக்கோள் யாது?
(i) பணமா?
(ii) இந்திரிய இன்பமா?
(iii) அதிகாரமா?
(iv) புகழா?
மரணத்தோடு இவை மறைதல்.

3 இந்தியாவின் விடை :

சம்பந்தர் : "ஏவமிக்க சிந்தையோ டின்பமெய்த லாமெனப்
பாவமெத் தனையுநீர் செய்தொரு பயனிலை
. . . . . . . . . . .
கோவமிக்க நெற்றியான் கோடிகாவு சேர்மினே"*

"அல்லல் வாழ்க்கையுய்ப்பதற் கவத்தமே பிறந்துநீர்
எல்லையில் பிணக்கினிற் கிடந்திடா தெழும்மினோ
. . . . . . . . . . .
கொல்லையேற்ற தேறுவான் கோலக்காழி சேர்மினே"†

அப்பர் : "தன்னில் தன்னை அறியுந் தலைமகன்
தன்னில் தன்னை அறியில் தலைப்படும்."‡

"வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்
பார்த்தற்குப் பாசுபதமருள் செய்தவன் பத்த ருள்ளீர்
கோத்தன்று முப்புரம் தீவளைத்தான் தில்லை யம்பலத்துக்
கூத்தனுக் காட்பட் டிருப்பதன்றோ நந்தம் கூழைமையே"§

சுந்தரர் : திருவாரூர்ப் பதிகம்.

"இறைகளோ டிசைந்த இன்பம்."

மணிவாசகர் : யாத்திரைப் பத்து, குழைத்த பத்து.
திருவருட்குறிப்பின் வழி நிற்க என்பது சாரம் :

4 இக்குறிக்கோளை யடைதற்குச் சாதனம் :

(i) உடம்பு : இன்றியமையாச் சாதனம். இதன் பெருமையும் சிறுமையும்,

"உடம்பா ரழியில் உயிரா ரழிவார்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கு முபாய மறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே"—திருமூலர்.

(ii) உலகியல் வாழ்வு : குறிக்கோள் நிறைவேறற்குச் சாதனம்—சிற்றின்பக் களியாட்டத்திற் கன்று.

(iii) பிற உயிர்த் தொடர்பு : நல்லாரிணக்கப் பயன். தாழ்ந்தோர்க் குதவலால் புண்ணியமும் கரண சுத்தமும் பெருகல்.

(iv) குறிக்கோட்கு வெகு தொலைவில் மக்களிற் பெரும்பாலோ ரிருக்கு முண்மைக்குச் சான்றுகள் : உலகில் போர், போட்டி, கொடிய வறுமையும் அதை மாற்ற எண்ணாத பெருஞ்

---

* மகா சமாஜப் பதிப்பு : சம்பந்தர் தேவாரம் : பக்கம் ௩௮௧.
† ,, ,, ,, ௩௮௧.
‡ ,, அப்பர் தேவாரம் : ,, ௩௪௦.
§ ,, சம்பந்தர் தேவாரம் : ,, ௪௨௩.

செல்வமும் ஒருங்கிருத்தல், அறிவுக் குறைவு, ஆற்றற் குறை, துன்ப மிகுதி.

ஆகையால் முன்னேற்றந் தேவை.

5 இந்திய மக்களின் தற்கால இழி நிலை :

(i) உடல் வலுவும், ஆயுளும் வரவாக் குறைதல்.

(ii) மனவலுக் குறைவு—புலவர் பலர் தோன்றாமை.

(iii) பெரும்பாலோர் வறுமை மிகுதி.

(iv) கல்விக் குறைவு—100-க்கு 12 பேருக்கு மேல் கையெழுத்திடவுங் கூடாமை.

(v) ஒழுக்கக் குறைவு—பொய் வழக்குகள் மிகுதி.

(vi) பத்திக் குறைவு—கோயில்கள் பல பாழடைந்திருத்தல், சமய ஞானக் குறைவு.

6 எல்லாத் துறைகளிலும் முன்னேற வேண்டிய அவசியம். அரசாங்கமும் சனத்தலைவரும் இக்குறைகளை உணர்ந்திருத்தலும், நீக்கப் பாடுபட்டு வருமுண்மையும். ஒத்துழைப்பின் அவசியம்.

7 சாதனம் :

(i) அனைவர்க்கும் திருந்திய குறிக்கோளுடைய கல்வி.

(ii) மேல் நிலையிலுள்ள சிலரை மட்டுமன்றிக் கீழ் நிலையிலுள்ள ஏழை எளியோரைக் கைதூக்கப் பாடு படுதல்.

(iii) இதற்கு வேண்டிய பொருளாதார வசதியும், அரசியல் முறையும், ஜன சமூக சீர்திருத்தமும்.

8 தமிழ் மக்கள் தற்காலச் சிறுமை :

(i) முற்பகுதியி லடக்கம்.

(ii) சில சிறப்பு வகைக் குறைவுகள். தற்காலத் தமிழ்ச் செல்வர்க்கும் பொது சனங்கட்கும் தமிழ்ப்பற்றின்மை. வங்க, தெலுங்க, ஜப்பானிய, ஆங்கில சகோதரர் பாஷாபிமானச் சிறப்பு.

(iii) தீண்டாமைக் கொடுமை. சாதி இந்துக்களுள்ளும் விபரீதப் பிளவுகள். சமயத்தில் சாதியை நுழைத்திருத்தல்.

அவர் முன்னேற்றம் : இந்தியாவின் முன்னேற்றத்தையொட்டியது. சில சிறப்புண்மைகள்.

(i) 2000 ஆண்டுகட்கு முன்னர் தமிழ் மக்கள் வாழ்ந்த வாழ்க்கை, இரண்டொரு கூறு நீங்கலாக மற்றெல்லா வகையிலும் தற்காலத் தமிழர்க்கு மேல் வரிச் சட்டமாயிருக்கும் சிறப்பு.

(ii) சமயாசாரியர் போதனையும் சாதனையும் போற்றுதலின் அவசியம். அப்பர் பாவநாசத் திருக்குறுந்தொகை, சம்பந்தர் பஞ்சாக்ஷரப் பதிகங்கள் பார்க்க.

(iii) திருக்குறளை ஒழுக்கத்திற்கு வேதமாய்க் கொள்ளல் சிறப்பு.

(iv) தமிழ்க் கல்வி பரப்பப் புலவரை முன்போற் பேணல்.

10 முன்னேற்ற முயற்சிகட்கு உயிர் நாவல்ல சாதனம்.
சமய வாழ்வு : இதைப் புனிதப் படுத்தலின் அவசியம்.

11 இதற்குக் கருவிகள்.

(i) நல்லொழுக்கமும் தெய்வ நிச்சயமும் நாவல்ல கல்வி பரப்பல்.

(ii) ஆசிரிய ரிலக்கண முடையோரே ஆசிரியர் வேலையிலமர்ந்து பணி புரியுமாறு ஏற்பாடு செய்தல்.

(iii) கோயில்களைப் புனிதப் படுத்தி, மக்கள் அறிவையும், ஒழுக்கத்தையும், பக்தியையும் வளர்க்கும் ஸ்தாபனங்களாக்கல்.

(iv) மடங்கள் தம் நியாயமான கடமைகளைக் குறைவறச் செய்யும் படி தூண்டல்.

v) பொதுநல ஊழியத்தில்—சிறப்பாய் இக்காலத்திற்கு வேண்டிய முறையில்—ஆண்டவனுக்கும் ஆருயிர்கட்கும் பணி செய்யும் வேட்கையுடைய சமயத் தொண்டரைப் பழக்கும் ஸ்தாபன மமைத்துப் பேணல்.

12 (i) பொருளும் உலக சுகமுமே நாட்டுச் சுதந்தர வேட்கையின் பயனென்று கோடலின் தீமை.

(ii) ஆன்ம லாபத்தின் ஒப்புயர்வற்ற மேன்மையும் அவசியமும். மற்ற நலங்கள் இதற்குச் சாதனமா யமைத்தல்.

(iii) அறிவும் அன்பும் பெருகுவதால்தான் நமது முன்னேற்றம் சித்தியாம்.

---

# குருடர்கள் திருப்பதிகம் விண்ணப்பித்த கல்வெட்டு

[கிருமி கண்டன்]

திருவாளர் து. அ. கோபிநாத ராயர் இயற்றிய சோழ வமிச சரிதச் சுருக்கத்தில் - திருவாமாத்தூரில் ஒரு சாசனம் அவ்வூரிலே திருப்பதிகம் பாட 16 குருடர்களை யேற்படுத்தி அவர்களுக்கு உணவுக்கும் ஆடைக்கும் வேதனம் கொடுத்துவரச் சோழன் திட்டஞ் செய்தானென்று கூறுகிறது (பக்கம் 72) என்றது கண்டு ஆமாத்தூர் சென்று கல்வெட்டறிக்கை (Ep. Rep. 1903 - 4 No. 433) உதவியால் இடமறிந்து படி எழுதி இவ்வுரை எழுதலாயிற்று.

விழுப்புரம் நிலயத்திற்கு வடமேற்கே மட்சாலையில் 3 மைலில் 'காவின் மாமணி பொன் கொழித்திழி சந்துகாரகில்தரும் பம்பை நீர் அருவி' யின் கரையிலுள்ள ஆமாத்தூர், பாடல் பெற்ற நடுநாட்டுத் தலங்கள் இருபத்திரண்டனுள் ஒன்று. இப்பெயர் ஆமாதாவூரின் மரூஉ வென்பர். கோமாதுருபுரம் இதன் நேராய வடமொழி யென்ப. இதற்குத் தேவாரம் 5-ம் அருணகிரிநாதர் திருப்புகழ் 4-ம் உள. நாவுக்கரசர் குறுந்தொகை 5-வது பாட்டால் இறைவர் பெயர் அழகியர் என்று தெரிகிறது. திருப்புகழில் அம்மையின் பெயர் முத்தார் நகை அழகுடையாள் என்று வருகிறது.

இக்கல்வெட்டு, கோயில் சுற்றில் கிழக்குச் சுவரிலுள்ளது. ஈண்டுத் தரும் கல்வெட்டின் மூலம் வெட்டின் நடையைத் தழுவிக் குற்றெழுத்தை

நெட்டெழுத்தாக மாற்றியும், ந - வுக்கு ன - வேண்டிய இடத்து வைத்தும் திருப்பதியம் என்பதனைத் திருப்பதிகம் என்றும், வரிகளின் எண்ணை நகக்குறியினுள் இட்டு இடையில் பெய்தும் விளக்கப் பட்டுளது. இவ்வெட்டின் எழுவாயில் பயின்றுள்ள மெய்கீர்த்தி, அநபாயன் என்றது இரண்டாம் குலோத்துங்கனுடையது. இவன் கி. பி. 1123 முதல் 1146 வரை ஆண்டவனாதலால் இவ்வெட்டின் காலம் கி. பி. 1125 ஆகும். இதன் மூலம் இதுவரை எவராலும் வெளியிடப் படாததால் ஈண்டுத் தருகிறோம் :—

ஸ்வஸ்தி ஸ்ரீ பூமேவுவளர் திருப்பொன் மார்வு புணர, நாமேவு கலைமகள் நிலம் பெரிது சிறப்ப, விசைய மாமகள் தன்னிரு புயத்திருப்ப, இசை (2)யின் செல்வி எண்டிசை விளங்க, திருபர் வந்திறைஞ்ச, நீணில மடந்தையைத் திருமணம் புணர்ந்து, சீர்வளர் (3) தருமணி முடி கவித்தன்ன அணிமுடி சூடி, மல்லல் ஞாலத்துப் பல்லுயிர்க்கெல்லாம் எல்லையிலின்பம் மியல்வி கில்லெ(4)ய்த, வெண்குடை நிழற்றச் செங்கோலோச்சி வாழி பல்லூழி ஆழி நடப்ப, செம்பொன் வீரஸிம்ஹாசனத்து புவன முழுதுடையா(5)ளொடும் வீற்றிருந்தருளிய கோவிராஜ கேசரிபன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு இரண்(6)டாவது இராஜ ராஜ வளநாட்டுப் பினாயூர் நாட்டு வாவலூர் நாட்டுத் தேவதானம்; திருவாமாத்தூர் ஆளுடைய அழகிய தேவர் (7) கோயிலில் திருப்பதிகம் பாடி வரும் குருடர்களைத் *தவித்து நம் தேவாரத்து திருப்பதியம் பாடும் பொய்யாத சேவடி தேவர் கணநாதனான (8) இராஜ ராஜப் பிச்சனுக்கும் இவன் வர்கத்தார்க்கும் இக்கோயிற் திருப்பதியக் காணியான இவ்வூர் முதல் காணியாக குடுத்தோம். (9) இவன் வர்கத்தாரையு மெய் இட்டுத் திருப்பதியம் பாடுவித்துக்கொண்டு குருடர்களுக்கு விட்டுவரும் நிவர்ந்த(10)ப்படி இவர்களுக்கும் விட்டுக் கல்வெட்டுகவென்று திருவாய் மொழிந்து திருமுகம் பிரசாதஞ் செய்து வந்தமையில் இக்குருடர்(11)கள் முன்பிலாண்டுகள் அநுபவத்தின்படி பாடி வரும் குருடர்கள் பேர் பதினறுவரும் இவர்களுக்கு கண்காட்டுவார் இருவரும் ஆ(12)கப் பேர் பதினேண்மர்க்கு பேரால் நெல்லு பதக்காக, நாளொன்றுக்கு நெல்லு முக்கலமாக, நாள் முந்நூற்றறுபதுக்கு நெல்லு ஆயி(13)ரத்தெண்பதின் கலமும், †புடவை முதலுக்கு பேரால் காசு ஒன்றாக; காசு பதினெட்டுக்கு காசு ஒன்றுக்கு நெல்லு இருபதின் கலமாக வ(14)ந்த நெல்லு ஆயிரத்து நானூற்று நாற்பதின் கலத்திற்கு, வேலி ஒன்றுக்கு நெல்லு நூற்றிரு(15)பதின் கலமாக இத்தேவர் தேவதானம் கடுவேனூரில் விட்ட நிலம் பன்னிரு வேலி. இந்நிலம் பன்னிரு வேலியும் காணியாக இவ்வூர் நில(16)ங் கலாதபடியே கைக்கொண்டு இத்திருப்பதியம் பாடுவார் பேர் பதினெண்மரும் மூன்று சந்தியும் வந்து திருப்பதியம் (17) விண்ணப்பஞ் செய்து முன்பிலாண்டுகள் இக்குருடர்கள் நிலங் கைக்கொண்டு செய்து வரும்படியே இத்திருப்பதியம் (18) விண்ணப்பஞ் செய்வாரும் செய்துவரக் கடவார்களாக. இப்பொய்யாத சேவடி தேவர் கணநாதனான ராஜ ராஜ பிச்சனுக்கும் இவன் வர்க்கத்தார்க்குங் காணியாக குடுத்தோம்.

இதில் வந்துள்ள கணக்கு வருமாறு:—பேர் ஒன்றுக்கு நெல் 2 மரக்காலாக (பதக்கு) நாள் ஒன்றுக்கு 18 பேருக்கு நெல் 3 கலம் (36 மரக்கால்); அப்படி நாள் 360-க்கு நெல் 1080 கலமும்; துணிக்கு (புடவை முதல்) பேர் ஒன்றுக்குக் காசு ஒன்றாகக் காசு 18-க்கு, காசு ஒன்றுக்கு நெல் 20 கலமாக வந்த நெல் (360 கலமும் ஆகக் கூடிய) 1440 கலத்திற்கு வேலி ஒன்றுக்கு நெல் 120 கலமாக 12 வேலி (60 காணி) தானம் செய்யப்பட்டன. இக்கணக்கினால் காணிக்கு 20 கல குத்தகையும், கலம் 12 மரக்காலாக அளவை வழங்கியதும், வருடத்திற்கு 360 நாள் கணக்கில் வைக்கப்பட்டதும், நாட்டில் கிடைக்கும் தானியமே காசுக்கு ஈடாக மூலமாக (Standard) வைத்தெண்ணப் பட்டதும் கிடைக்கின்றன. அற்றை நாளிலேயே குருடர் விருத்தி சமயத் துறையில் கோலி கையாளப்பட்டது தெரிகிறது.

* தவித்து - தவிர, நீக்க. † புடவை - துணி, உடை.